[16th August 1960] [Mr. Speaker]

DRAFT AMENDMENT.

To rule 3 of the said rules, the following further proviso shall be added, namely :—

" Provided further that in the case of 506 Kannakulam Inam Estate, Ramanathapuram district where the settlement operations have been completed in Fasli 1368, the Government may postpone the deposit of the whole or part of the compensation due in respect of the estate by a further period not exceeding six months ".

The motion was put and carried.

## V.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS PUBLIC PREMISES EVICTION OF UNAUTHORIZED OCCUPANTS BILL, 1960, (L.A. BILL NO. 24 OF 1960.)

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Public Premises (Eviction of Unauthorized Occupants) Bill, 1960.

MR. SPEAKER : The question is—

' That leave be granted for the introduction of the Madras Public Premises (Eviction of Unauthorised Occupants) Bill, 1960[a].'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

## VI.—DISCUSSION ON THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET FOR 1960-61—*cont.*

MR. SPEAKER : Now we shall continue the discussion on the Madras State Electricity Board Budget. On the 13th instant, the hon. Member, Sri M. R. Kandaswamy Mudaliyar, spoke for six minutes. If he wants to continue his speech he can speak for five minutes more, and then I shall ask the Hon. Minister to reply.

நேற்றைக்கு கனம் அங்கத்தினர் அவர்கள் 6 நிமிஷங்கள் பேசியிருக்கிருர்கள். மேலும் அவர்கள் சொல்ல வேண்டியது ஏதாவது பாக்கியிருந்தால், இன்னும் 5 நிமிஷங்கள் பேசலாம்.

SRI M. R. Kandaswamy Mudaliar rose.

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் பேசவேண்டுமென்ருல் பேசலாம். நேற்று 6 நிமிஷங்கள் பேசியாகிவிட்டது. இப்பொழுது 5 நிமிஷங்கள் தருகிறேன். பேசுங்கள்.

* SRI M. R. KANDASWAMY MUDALIAR: கனம் சபாநாயகர் அவர்களே, 13-ம் தேதியன்று சில விஷயங்களை எடுத்துச் சொன்னேன். அதாவது பிற்பட்ட பகுதியாகிய சேலம் ஜில்லாவைப் பொறுத்த வரையில், ஜல வசதி இல்லாத தன் காரணமாக பருவ மழை தொடர்ச்சியாக 4, 5 வருஷங்

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 11th August 1960.

களாக இல்லாமல் இருப்பதனுல், பிற்பட்ட ஜில்லா என்ற முறையில் மினிமம் சார்ஜை ரூ. 35-ஆகக் குறைப்பதற்கு அந்த ஜில்லாவை அவசியம் பிற்பட்ட ஜில்லாவாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் அமைச்சர் அவர்களே மிகவும் பணிவோடு கேட்டுக் கொள்ளுகிறேன். ஜல வசதி உள்ள இடங்களுக்கு அந்த 45 ரூபாய் மினிமம் சார்ஜை வைத்துக் கொண்டு, எங்கள் ஜில்லாவைப் போன்ற வரண்ட பிரதேசங்களில் மினிமம் சார்ஜ் இருக்க வேண்டிய அவசியமே இல்லே. விவசாயிகளுக்கு எப்படியாகிலும் நன்மை செய்ய வேண்டும், உணவு தானிய உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு நாம் பல சௌகரியங்களே விவசாயிகளுக்குச் செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறோம். தண்ணீர் இருக்கும்பொழுது "கரண்டு" சார்ஜ் வீணுகக் கட்ட வேண்டும் என்பதற்காக இறைக்காமல் படிக்கு எந்த விவசாயியும் இருக்கமாட்டான். கொஞ்சம் தண்ணீர் இருந்தாலும் அதை இறைத்து விவசாயம் செய்யக்கூடிய திறமைசாலிகளான விவசாயிகள் சேலம் ஜில்லாவில் இருக்கிறார்கள். தண்ணீர் இருந்தாலும் இறைக்காமல் விட்டுவிடுவார்களோ என்ற காரணத்தினுல்தான் மினிமம் சார்ஜ் கட்ட வேண்டும் என்ற காரண்டி வைத்திருக்கிறார்கள் என்று நேரடியாகக் கேட்ட பொழுது மந்திரி அவர்கள் சொன்னுர்கள். சேலம் ஜில்லாவைப் போன்ற வரண்ட பிரதேசங்களில் இந்த மினிமம் சார்ஜை எடுத்து விடுவது நல்லது என்று நினைக்கிறேன்.

கம்பெனிகளுக்கு லேசென்ஸ்கள் கொடுத்திருப்பது பெரிய தொல்லேயாக இருக்கிறது. சுற்றுப் பக்கத்திலுள்ள கிராமங்களுக்கு அரசாங்கம் மின்சாரத்தை விஸ்தரித்திருக்கிற பொழுது, பக்கத்திலுள்ள கிராமங்களேப் பொறுத்த வரைக்கும் கம்பெனிகளுக்கு லேசென்ஸ் இருப்பதால், அந்தக் கிராமங்களுக்கு மின்சார வசதி கிடைக்காமல், அவர்கள் அந்தப் பலனே அனுபவிக்க முடியவில்லே. பல ஆண்டுகள் ஆகியும் அந்தக் கிராமங்களுக்கு எந்தவிதமான பலனும் தேடித்தராமல் இருக்கிறார்கள். நான் அமைச்சர் அவர்களிடத்திலே ஒரு வருஷ காலத்திற்கு முன்பே சொன்னேன். பக்கத்து கிராமங்களில் நமது அரசாங்கம் மின்சாரம் கொடுத்து பம்பு செட்டுகள் ஓடுகின்றன. கம்பெனி லேசென்ஸ் உள்ள இடங்களுக்கு அவர்கள் தங்களால் மின்சாரம் கொடுக்க முடியவில்லே என்று சொல்லுகிறார்கள். பல கிராமங்களுக்கு அரசாங்கம் கொடுத்திருக்கிறார்கள். அதற்குத் தொடர்ச்சியாக உள்ள 3, 4 கிராமங்களுக்கு அந்த இடங்கள் கம்பெனி லேசென்ஸ் பெற்ற இடங்கள் என்ற காரணத்தினுல், இரண்டு ஆண்டு காலமாகியும் மின்சாரம் கொடுக்கப்படாமல் அந்தக் கிராமவாசிகள், விவசாயிகள், எந்த விதமான முன்னேற்றமும் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகையினுல், இந்தக் கம்பெனி லேசென்ஸ்களே ரத்து செய்துவிட்டு, இவைகளே சர்க்காரே மேற் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

16th August 1960] [Sri M. R. Kandaswamy Mudaliar]

மேட்டூர் டன்னல் ஸ்கீம் வந்ததற்காக என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். எங்கள் பிராந்தியத்திலிருந்து லக்குவம்பட்டி, குள்ளனம்பட்டி, கரிச்சிப்பட்டி முதலிய சுற்றுப் புறத்துக் கிராமங்களிலிருந்து விண்ணப்பங்கள் போட்டிருக் கிறோம், மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று. ஆனால், விண்ணப்பித்துக் கொண்டு இரண்டு ஆண்டுகள் ஆகியும், மின்சாரம் சப்ளை செய்யப்படாத நிலையில் இருக்கிறதினால், அமைச்சரவர்கள் அதைக் கவனித்து ஆவன செய்ய வேண்டும் என்று கோருகிறேன்.

அதோடுகூட நம் அரசாங்கத்தில் ஒரு திட்டமிட்டு, "வயரிங்" பண்ணின வீடுகளுக்கு மின்சாரம் கொடுப்பதாகச் சொல்லியதினால், பாப்பாரப்பட்டி கிராமத்தில் சில வீடுகள் வயரிங் பண்ணியிருந்தும், ரொம்ப நாட்கள் ஆகியும், இன்னும் கனெக்ஷன் கொடுக்கப்படவில்லை. காரணம், 40 வீடுகள் இருக்கக்கூடிய இடத்தில், 20, 25 வீடுகள் வரை உடனடியாக வயரிங் பண்ணி விட்டார்கள், மற்றவர்கள் அதைச் செய்யவில்லை. இவர்கள், 40 வீடுகளும் ஏககாலத்தில் வயரிங் செய்தால்தான் கொடுப்போம் என்கிறார்கள். அங்குள்ளவர்கள் நெசவாளிகள், ஏழைகள். பாப்பாரப்பட்டிக் கிராமத்தில் அம்மாதிரிச் செய்திருக்கிறார்கள். வயிரிங் செய்த 20, 25 வீட்டுக்காரர்கள் பணம் கட்டத் தயாராக இருக்கிறார்கள். இருந்தபோதிலும் கனெக்ஷன் கொடுக்கப்படவில்லை. ஒரு வீடு கூடப் பாக்கி யில்லாமல் வயரிங் செய்தால்தான் கனெக்ஷன் கொடுப்போம் என்கிறார்கள். நெசவாளிகள், வயிரிங்கைச் செய்துவிட்டு தொல்லைப்படுகிறார்கள். கிட்டத்தட்ட வயிரிங் செய்யாத வீடுகள் அடுத்தடுத்திருப்பதால், வயிரிங் செய்த வீடுகளுக்கு மட்டுமாவது உடனடியாகக் கனெக்ஷன் கொடுக்கவேண்டும் என்று கனம் அமைச்சரவர்கள் அவசர உத்தரவு போடவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே, இந்த பாப்பாரப் பட்டிக் கிராம நிலையைக் கவனிக்கவேண்டும் என்று அமைச்சரவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

மினிமம் கன்சம்ஷனை 2,000 யூனிட்டுகளிலிருந்து 1,000 யூனிட்டுகளாக கிராமங்களுக்குச் செய்திருப்பதை பாராட்டு கிறேன். அதைப் பொறுத்த வரையில் சர்க்கார் தாராளமாக நடந்து கொண்டதற்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

ஒப்பந்தக் கிணறுகள் விஷயத்தில் தாராள மனத்தோடு பல லட்சம் ரூபாய்கள் நஷ்டம் வந்தாலும் பரவாயில்லை என்று செய்திருப்பதற்கு என் பாராட்டுதலைத் தெரிவிக்கிறேன்.

கடைசியாக, மூன்றாவது திட்டத்தில் ரூ. 118 கோடி செலவு செய்து, 8,000 கிராமங்களுக்கு மின்சாரம் அளிக்கவும், 75,000 பம்புசெட்டுகளுக்கு வசதி செய்யவும் திட்டமிட்டிருப்பதற்கு அரசாங்கத்தைப் பாராட்டி, இந்தப் பட்ஜெட்டை வரவேற்கிறேன்.

[16th August 1960

MR. SPEAKER: *(13—8—1960)* அன்று நினைத்தேன், கனம் அங்கத்தினர் ஸ்ரீ கந்தசாமி முதலியார் பேசிய பிறகு மந்திரியவர்கள் பதிலளிக்கக் கூப்பிடலாம் என்று. ஆனால், இப்பொழுது பல அங்கத்தினர்கள் இன்னும் பேச வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அந்த அளவுக்கு "ரெண்ட் கண்ட்ரோல் பில்" தள்ளிக் கொண்டே போகும். சபையின் அபிப்பிராயம் என்ன? சபை முதல்வர் என்ன சொல்லு கிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: I want to submit that we shall stick to the programme we have laid down. If we allow further speeches now, it will go on endlessly. Therefore I request that the Hon. Minister for Electricity may be called upon to reply now.

SRI K. VINAYAKAM: Sir, we were given to understand that clause by clause consideration of the Rent Control Bill would be taken up only tomorrow. We are not prepared for the same now.

MR. SPEAKER: The hon. Member was not present in the House when the vital decision was taken.

SRI K. VINAYAKAM: It was understood at that time that there were only about 10 speakers left behind who might speak on the Electricity Board Budget. That was the understanding.

THE HON. SRI C. SUBRAMANIAM: No, Sir.

SRI K. VINAYAKAM: The Deputy Speaker who was presiding at that time, during the fag end of the day, might please be referred to.

MR. SPEAKER: Please don't try to make any difference between the Speaker and the Deputy Speaker. What I say and what the Deputy Speaker says have the same effect.

SRI K. VINAYAKAM: I mean the "Presiding Officer" at that time.

MR. SPEAKER: I think we have had enough discussion. The Hon. Minister for Electricity may now reply.

THE HON. SRI V. RAMAIAH: கனம் சபாநாயகர் அவர்களே, கடந்த இரண்டு தினங்களாக, பல அங்கத்தினர்கள் இந்த விவாதத்தில் பங்கு கொண்டு நல்ல பல கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். ஒவ்வொரு அங்கத்தினரும் கூறிய கருத்துக்களை முறையாக எடுத்துக் கொண்டு, அவற்றை நன்றாகப் பரிசீலனை செய்து தீர்க்க வேண்டும் என்பதுதான் என்னுடைய இந்த வருஷத் திட்டம் என்று சொல்ல விரும்புகிறேன். கடந்த இரண்டு ஆண்டுகளாக அங்கத்தினர்கள் சொன்ன கருத்துக்களை யெல்லாம், மின்சார போர்டாரும் முறையாகப் பரிசீலனை செய்து, அவற்றைத் தீர்த்துக் கொடுத்ததன் காரணமோ

16th August 1960] [Sri V. Ramaiah]

என்னவோ, இந்த ஆண்டு அதிகமான அங்கத்தினர்கள் ஆரம்பத்தில் அவ்வளவு பேர்கள் இல்லை என்றாலும், இப்பொழுது பெயர்கள் வந்து கொண்டிருக்கிறது—பேச வேண்டும் என்று விரும்புகிறார்கள் போலும். இருந்தாலும் என்னைப் பொறுத்தவரை, அங்கத்தினர்கள் சட்ட சபையில் கூறினாலும் சரி, அல்லது தனிப்பட்ட முறையில் குறைகளை, கோரிக்கைகளைச் சொன்னாலும் சரி, அவற்றைத் தீவிரமாகப் பரிசீலனை செய்து, குறைகளைத் தீர்க்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. அந்த அடிப்படையில், மின்சார போர்டு மூலமாக, "அன்கனெக்டெட் மினிமம் சார்ஜ்" சம்பந்தப் பட்ட முடிவை எடுத்திருக்கிறோம். "மினிமம் காரண்டி"-யையும் இன்னும் சுலபமாக ஆக்கிக் கொடுத்து அதிகமாக விவசாயி களுக்கு நன்மை பயக்கும் அளவில் பரிசீலனை செய்கிறோம். அங்கத்தினர்களும் ஒப்புக்கொள்ளுவார்கள்—அவர்கள் தங்கள் கருத்துக்களை இரண்டு மூன்று ஆண்டுகளாக வலியுறுத்திச் சொல்வதனால்தான், மின்சார போர்டார் அவர்களுக்கு லாபமோ இல்லையோ—விவசாயிகளுக்கு, முக்கியமாக கிராம மக்களுக்கு, அதிக நன்மை செய்யவேண்டும் என்ற முறையில் போர்டின் போக்கு அமைந்திருக்கிறது என்று சொல்ல விரும்பு கிறேன்.

இந்த விவாதத்தில் அளிக்கப்பட்ட ஒவ்வொரு கருத்துக்கும், ஒவ்வொரு பிரச்சினைக்கும், உடனடியாகப் பதில் சொல்லா விட்டாலும், நான் அங்கத்தினர்களுக்கு உடனடியாக சொல்லக் கூடியதெல்லாம், அவர்கள் கருத்துக்கள் முறையாக கவனிக்கப் பட்டு, குறைகளைத் தீர்க்க அரசாங்கமும், மின்சார போர்டும், முயற்சிகள் எடுக்குமென்று சொல்லிக் கொண்டு விவாதத்தில் அளிக்கப்பட்ட பல பொதுவான பிரச்சனைகளுக்கு மட்டும் பதில் சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

விவாதத்தை ஆரம்பித்து வைத்த கனம் அண்ணாமலை அவர்கள், மின்சார போர்டை அதிகமாகப் பாராட்ட முடியாது என்று சொன்னார்கள். அவர்கள் சொன்னதற்கு ஒரே ஒரு காரணம் தான்; கனம் அண்ணாமலை ஆரம்பத்தில் பேசியதில் ரொம்ப சந்தோஷம். அவர்கள் சொன்னார்கள், 5, 6 கிராமங் களுக்கு மின்சாரம் கொடுக்கப்படவில்லை என்று. கனம் அண்ணாமலை கிராமப் புறத்தில் இருந்து வருவதால், மின்சாரம் கிராமங்களுக்கு விஸ்தரிக்கப் பட்டிருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டார்கள். ஆனாலும் "வெளிச்சம் போட" மின்சார கொடுக்கப்படவில்லை என்று சொன்னார்கள். அவர்கள் கட்சிக் காரர்கள் சென்ற ஆண்டு "வெளிச்சம் தானே மின்சார இலாகாவில் போடுகிறார்கள்" என்று சொன்னார்கள். அவர்களுக்குப் பதில் அளிப்பது போல், கனம் அண்ணாமலையின் பிரசங்கம் அமைந்தது. வெளிச்சம் போடக் கொடுக்கவில்லை என்றாலும், விவசாயத்திற்கும், அவர்கள் வாழும் கிராம முன்னேற்றத்திற்கும், சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளாக விஸ்தரிக்கப்பட்டு வந்திருக்கிறது. அதைக் கொண்டு, விவசாயிகள் நிலையில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

அதனால், அவர்கள் ஆசைப்படுகிறார்கள், வெறுமனே விவசாயத்திற்கு மட்டும், சிறு தொழில்களுக்கு மட்டும் கொடுத்தால் போதாது, எங்களுக்கு முழுப் பயனும் கிடைக்க வேண்டும், எங்கள் வீடுகளுக்கும், தெருக்களுக்கும் மின்சாரம் வேண்டும் என்று கேட்கிறார்கள். அந்த நிலைமை எப்படி ஏற்பட்டது ? முதலில் அவர்கள் அத்தியாவசியத் தேவைகள் பூர்த்தியாகி விட்டால்தானே இதை கனம் அண்ணாமலை ஒப்புக்கொள்ளுவார்கள் ! கிராமங்களுக்கு விவசாயத்திற்கு விஸ்தரிக்கப்பட்ட பிறகுதான், அவர்கள் இன்னும் கொஞ்சம் சுகமாக இருக்க வேண்டும் என்று வீடுகளுக்கும், தெருக்களுக்கும், மின்சாரம் கேட்கிறார்கள். அதையும் கவனிக்க வேண்டியதுதான். ஆனால், கனம் அண்ணாமலை யாருக்கு முதல் இடம் கொடுக்க வேண்டும் என்கிறார்கள் ? இந்த மாகாணத்தில் இருக்கும் 20,000 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. இப்படிப்பட்ட என்னுடைய ஆசையை அவர்கள் ஆதரிப்பார்கள் என்பதில்
9-30 a.m. சந்தேகம் இல்லை. மின்சாரம் கிராமங்களுக்குப் போகும் நேரத்தில் பிற்போக்காக இருக்கக்கூடிய கிராமங்களிலுள்ள விவசாயிகளுடைய வாழ்க்கைத்தரம் உயர வேண்டும் என்பது தான் என்னுடைய ஆசையும். குறிப்பாக அவர்களுடைய கஷ்டத்தை நீக்குவதற்கு, அவர்களுக்கு என்ன சிரமங்கள் இருக்கின்றனவோ அவைகளை நீக்குவதற்கு, வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான் என்னுடைய ஆசை.

(Deputy Speaker in the Chair.)

அதற்கு உடனடியாக என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டும் என்று தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். கிராமங்களிலுள்ள ஒவ்வொரு விவசாயியும் தனக்கு மின்சாரம் கிடைக்க வேண்டும் என்றும் அதன் மூலம் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்றும், உணவு தானியங்களைப் பெருக்க வேண்டும் என்றும், நினைத்துக்கொண்டிருக்கிறான். இப்பொழுது விவசாயிகள் விவசாய தான்யங்களை அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டும் என்றும் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக ஐந்தாறு ஆண்டுகாலமாக நமது மாகாணத்தில் மின்சார விஸ்தரிப்பு அதிகமாக நடந்து கொண்டிருக்கிறது. கிராமங்களில் சென்று பார்த்தால் அங்குள்ள விவசாயிகளுக்கு இன்னும் அதிகப்படியாக விவசாயம் செய்ய வேண்டும் என்ற ஆவல் இருக்கிறது. அதற்கு வேண்டிய புள்ளிவிவரங்களும் நம்மிடம் இப்பொழுது இருக்கிறது. இதற்கு ஒரு உதாரணம் சொல்லலாம். சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த வரைக்கும் தஞ்சை ஜில்லாவில்தான் அதிகமாக நெல் விளைச்சலாகிறது என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அங்கே இருக்கக் கூடிய ஒவ்வொரு ஏக்கருக்கும் காவிரித் தண்ணீர் கிடைக்கிறது, பாசனத்திற்கு. அதே நேரத்தில் ஐந்து வருஷ மின்சார விஸ்தரிப்பிற்குப் பிறகு இன்றைக்குக் கணக்குப் பார்த்தால் பல வரண்ட ஜில்லாக்கள் இருக்கின்றன. கனம் அண்ணாமலை அவர்களுடைய ஜில்லாவைப் போன்ற பல ஜில்லாக்கள் வரண்ட

16th August 1960] [Sri V. Ramaiah]

ஜில்லாக்களாக இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் மின்சார விஸ்தரிப்பு செய்து கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அங்கு இருக்கக்கூடிய விவசாயிகளிடமிருந்து அதிகப்படியான கோரிக்கைகள் வந்துகொண்டிருக்கின்றன. விவசாயத்தை அதிகப்படுத்த வேண்டும் என்றும், அதற்கு மின்சாரம் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்த அடிப்படையிலேயே இன்னும் மேலும் மேலும் அதிகப்படியான கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பைச் செய்து கொடுக்க வேண்டும் என்று அரசாங்கமும் திட்டம் போட்டு வேலையும் செய்து கொண்டிருக்கிறது. அதையேதான் ஐந்தாறு வருஷமாக இந்தச் சட்ட சபையில் அரசாங்கமும் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறது. மற்றும் பல இடங்களிலும் சொல்லிக் கொண்டிருக்கிறது. அதற்கு வேண்டிய பல திட்டங்களையும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதாவது இன்னும் கொஞ்ச நாட்களில் இந்த மாகாணத்திலுள்ள எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரத்தைக் கொடுத்து விட வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அதன் மூலம் விவசாயத்தை இன்னும் அதிகப்படுத்த முடியும். அதன் மூலம் இன்னும் விவசாயத்தை அதிகப்படுத்தக்கூடிய சூழ்நிலை ஏற்படும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ளுகிறேன். இப்படி எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரத்தைக் கொடுத்து விட்டால் அதை வைத்துக் கொண்டு அரசாங்கம் பல இலாக்காக்கள் மூலமாக கிராமங்களில் பல சிறு தொழில்களை ஆரம்பிக்கலாம். பல சிறு தொழில்களில் ஈடுபட்டிருக்கக்கூடிய பல இலாக்காக்கள் தங்களுடைய தொழில்களை பல கிராமங்களில் கொண்டு போக முடியும். அரசாங்கம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் எந்தெந்த தொழில்களை கிராமம்களில் ஆரம்பிக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டு திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறார்களோ அவைகளையெல்லாம் நிறைவேற்ற முடியும். கிராமங்களில் பல குடிசைத் தொழில்களை ஆரம்பிக்கக் கூடிய வாய்ப்பு ஏற்படும். நகரங்களிலேயே எல்லாத் தொழில்களையும் ஆரம்பிக்காமல் கிராமங்களுக்கும் அவற்றில் சிலவற்றைக் கொண்டுபோய் அமைக்க வழி ஏற்படும். அந்த வகையில் கிராமங்களுக்கும் மின்சாரத்தை விஸ்தரிக்க தக்க நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக் கொண்டிருக்கிறது. அப்படி ஒவ்வொரு கிராமத்திலும் சிறு தொழிலையோ அல்லது ஏதாவதொரு குடிசைத் தொழிலையோ ஆரம்பிப்பதாக உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. சில ஆண்டுகளுக்குப் பிறகு பார்த்தால் இந்தத் திட்டத்தின்படி எல்லாக் கிராமங்களிலும் ஏதாவது ஒரு தொழில் நடந்து கொண்டிருக்கும். ஆகவே பெரிய நகரங்களில் தொழில்களை ஆரம்பிக்கும் வாய்ப்பைக் காட்டிலும் கிராமங்களிலேயே ஆரம்பிக்கக்கூடிய வாய்ப்பு இனிமேல் அதிகமாக ஆவதற்கு வழி ஏற்படும்.

இந்த அடிப்படையில் கிராமத் திட்டங்களைப் பூர்த்தி செய்ய வேண்டுமானால் விவசாயிகள் " மினிமம் காரண்டி " கொடுக்க வேண்டுமென்ற ஒரு கொள்கை இருக்கிறது. அப்படிக்

கொடுத்தால்தான் மின்சாரம் கொடுக்கப்படும் என்ற ஒரு விதி இருக்கிறது. அப்படிக் கொடுத்தால்தான் கண்டிப்பாக மின்சாரம் விஸ்தரிக்கப்படும். அந்த முறையில் விவசாயிகள் கிராமங்களில் கூட்டு சேர்ந்து மின்சார போர்டுக்கு எழுதினால் அவர்கள் அப்படி பத்து சத விகிதம் இருக்கிறதா என்று பார்த்து மின்சாரத்தை விஸ்தரித்துக்கொடுக்கிறார்கள். அந்த முறையில் இன்றைக்கு சுமார் பத்தாயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது. இப்படி கிராமங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிக்கும்போது அதற்குத் தகுந்த "ரிடர்ன்" வருகிறதா என்று பார்த்துத்தான் விஸ்தரிக்கப்படுகிறது. அங்கங்கே மினிமம் காரண்டி கொடுத்தால்தான் அவர்களுக்குக் கொடுக்கப் படுகிறது. அப்படிக் கொடுக்கும்போது அதற்கு 10 அல்லது 18 சத விகிதம் வரைக்கும்கூட உயர்ந்து விடுகிறது. அதைப் பற்றியும் பரிசீலனை செய்து மின்சாரம் அவசியம் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் அவர்களுக்கு கொடுக்கப் பட்டு வருகிறது. இப்படிக் கொடுத்துக்கொண்டிருக்கும் போது பாக்கி இருக்கக்கூடிய நடுத்தர விவசாயிகளும் கீழ்த்தர விவசாயிகளும் தங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். உடனேயே அவர்களுக்கும் கொடுக்க முடியாமல் இருக்கிறது. ஆனால் எல்லாக் கிராமங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் பார்க்கும்போது இதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதைப் பற்றி இன்னும் புனராலோசனை செய்து கொண்டிருக் கிறோம். சாதாரணமாக மினிமம் காரண்டி கொடுக்கிறவர் களுக்கு மின்சாரம் கொடுக்கும்போது மற்றவர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்பதற்காக அதைப்பற்றி பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம். அவர்களுக்கும் கொடுக்க என்ன வழி கண்டுபிடிப்பது என்பதைப் பற்றி யோசித்துக்கொண்டிருக் கிறோம். அதுதான் இப்பொழுது முன் நிற்கக்கூடிய பிரச்சினை. கிராம அபிவிருத்தியில் அக்கரை கொண்டிருப்பதால் இந்தப் பிரச்சினையைப் பற்றி தீவிரமாக ஆலோசனை செய்யப்பட்டு ஒவ்வொரு கிராமத்திற்கும் இதை விஸ்தரிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் சகல உற்பத்திக்கும், விவசாயிகளுக்கும் மின்சாரம் வழங்க வேண்டும் என்ற அடிப்படையில் அதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதற்காகவும் அதைத் துரிதமாகப் பயன்படச் செய்ய வேண்டும் என்பதற்காகவும், அதைப் பற்றி நன்றாக ஆராய்வதற்கு சில மாதங்களுக்கு முன் இந்த கிராம மின்சார விஸ்தரிப்புத் திட்டத்தைப் பற்றி நல்ல முறையில் பரிசீலனை செய்வதற்கு அரசாங்கத்திலுள்ள சில அதிகாரிகள் எல்லாம் கூடி ஒரு கமிட்டியை அமைத்தார்கள். அதற்குத் தலைவராக டெவலப்மெண்ட் கமிஷனரும், அது சம்பந்தமாகவுள்ள மற்ற அதிகாரிகளும் அந்த இலாகாவில் வேலை செய்யக்கூடிய பல அதிகாரிகளும் அந்தக் கமிட்டியில் அங்கத்தினர்களாகச் சேர்க்கப்பட்டனர். அந்தக் கமிட்டி இதைப்பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து ஒரு ரிபோர்ட்டையும் அனுப்பி இருக்கிறார்கள். அந்த ரிபோர்ட்டை இன்னும் நான் பார்க்கவில்லை. அப்படி விஸ்தரிப்பதாக இருந்தால் குறைந்தபட்ச "லோட்" எவ்வளவு

16th August 1960] [Sri V. Ramaiah]

உத்தரவாதம் கண்டிப்பாக எவ்வளவு வர வேண்டும், "ட்ரான்ஸ் பார்மர் கபாசிடி" என்ன என்பதைப் பற்றியெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. கிராம விவசாயிகளுடைய தேவை என்ன, எந்த அளவு லோடை அதிகப்படுத்தினுல் அந்தத் தேவையைப் பூர்த்தி செய்யலாம் என்பதைப்பற்றியெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. ஐம்பது ஹார்ஸ் பவர் லோட் எடுத்துக்கொண்டால் அதற்குத் தகுந்த அளவு குறைந்த பட்சமாக, சிக்கனமாக, எவ்வளவு உற்பத்தி செய்யலாம், அந்தத் திட்டத்தை எந்த அளவுக்குச் சிக்கனமாகப் பூர்த்தி செய்ய முடியும், எந்த அளவுக்கு விவசாயிகளுக்கு "சப்ளை" செய்ய முடியும் என்பதைப் பற்றி யெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. ஒரு கிராமத்தில் "மினிமம் காரண்டி" கட்டக்கூடிய பத்து விவசாயிகளுக்குக் கொடுக்கும்போது மற்ற நடுக்கர விவசாயிகளுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் எந்த முறையில் கொடுக்கலாம் என்பதைப் பற்றியும் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு இந்த அரசாங்கம் கொடுக்கக்கூடிய மற்ற மான்யங்களை எடுத்துக் கொண்டு அல்லது கடன் வசதி செய்து கொடுத்து அந்த அடிப்படையில் மின்சாரத்தை விஸ்தரிக்கலாமா என்பதைப்பற்றியெல்லாம் பரிசீலிக்கப்படுகிறது. இப்பொழுது அப்படியெல்லாம் அவர்களுக்குக் கொடுக்க முடியவில்லை. ஆரம்ப காலத்தில் போடப்பட்ட திட்டத்தினுல், அதாவது குறைந்த பட்சம் இவ்வளவு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற திட்டத்தினுல், அப்பொழுது ஏற்படுத்தப்பட்ட விதிகளினுல் அவர்களுக்கு இப்பொழுது கொடுக்க முடியவில்லை. அவர்கள் அதிகமாக தேவை என்று கேட்டால், அவர்களுக்குக் கொடுக்க முடியவில்லை. இன்றைக்கு இருக்கக்கூடிய கொள்கை அடிப்படையில், அதாவது எல்லா கிராமங்களுக்கும் மின்சாரத்தை விஸ்தரிக்கவேண்டும் என்ற அடிப்படையில் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அந்தத் திட்டத்தின் அடிப்படையில் அவர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று ஆரம்பித்தால் அந்த அளவுக்கு லோடை அதிகப் படுத்தியாக வேண்டும். அதற்கு என்ன வழி கண்டுபிடிப்பது என்ற கட்டத்தில் இருக்கிறோம். அந்த நிலையில் இருக்கிற காரணத்தால் கனம் அண்ணமலை, கனம் சசிவர்ண தேவர் இன்னும் மற்றவர்கள் சொன்னதுபோல், பலர் மின்சாரம் வேண்டும் என்று கேட்கிறார்கள் அவர்களுக்குக் கொடுக்கவில்லை, என்று சொல்லக்கூடிய அளவில் இருக்கிறது. பல மனுக்கள் போட்டும் கிடைக்கவில்லை என்று சொல்லக்கூடிய அளவில் இருக்கிறது. உடனடியாக மனுக்கள் வந்தால் அவற்றைப் பூர்த்தி செய்யக் கூடிய நிலைக்கு நாம் வரவேண்டும். அதற்குப் புதுத் திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறோம். அது இப்பொழுது பரிசீலனையில் இருக்கிறது. இதையெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டுமென்ற காரணத்தினுல் ஒரு கமிட்டியை நாம் போட்டிருக்கிறோம். அந்தக் கமிட்டியின் அறிக்கை வந்த பிறகு அதை மின்சார போர்டும், அரசாங்கமும் பரிசீலனை செய்து இன்றைக்கு இந்தச் சட்ட சபையில் சொல்லப்பட்ட கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு மேலும் விஸ்தரிப்

பதற்கு என்னென்ன முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமோ அதையெல்லாம் செய்வேன் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்னும் இதைப்பற்றிப் பேசும்போது மற்றொரு கருத்து—நமது பிரஜா சோஷியலிஸ்டு கட்சியைச் சேர்ந்த சின்னதுரை அவர்கள் இங்கே இல்லை—அவரது பிரசங்கம் காரசாரமாகவே இருந்தது—"இந்த அரசாங்கம் என்ன அதிகமாகச் செய்து விட்டது? கிராமங்களில் எட்டு லட்சம் கிணறுகள் இருக்கின்றன. இவர்கள் ஏதோ ஒரு லட்சம் கிணறுகளுக்கு மட்டும் மின்சாரம் விஸ்தரிப்புச் செய்துவிட்டு மிக அதிகமாக பாராட்டிக் கொள்வதற்கு இடமே இல்லை" என்பதாகக் கூறினார்கள். உண்மையில் அவர்கள் இப்போது இங்கே இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஐம்பது வருஷங்களுக்கு முன்பு நம்முடைய நிலைமை என்ன, இப்போது எந்த நிலையில் நாம் இருக்கிறோம் என்பதையெல்லாம் பார்க்கவேண்டும். கனம் சின்னதுரை அவர்கள் சொன்னதுபோல் நாம் இருந்திருந்தால் கனம் அண்ணாமலை அவர்களுக்கு குற்றச் சாட்டுக்கே இடமில்லாமல் செய்திருக்க முடியும்.

கனம் அண்ணாமலை அவர்கள் மற்றொரு கருத்தைச் சொன்னார்கள். இந்த மாகாணத்தில் மூன்றாவது திட்டம் பூர்த்தியாகும்போதுகூட சராசரி நபருக்கு 60 யூனிட்டுகள் தானே கொடுக்க முடியும்? சயாம் தேசத்தில் 4,000 யூனிட் கொடுக்கிறார்கள். அமெரிக்காவில் 2,000 யூனிட் கொடுக்கிறார்கள் என்றார். இன்னொன்று, ஸ்வீடன் தேசத்தை எடுத்துக்கொண்டால் 4,500 யூனிட்டுகள் கொடுக்கப் படுகிறது. ஆனால், இன்றைக்கு நம் ராஜ்யத்தை நம் தேசத்தில் உள்ள இதர ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்க அவர் தயாராய் இல்லை. நமது ராஜ்யம் மற்ற ராஜ்யங்களைவிட உயர்ந்த நிலைக்குப் போய்விட்டது என்ற காரணத்தினால்தான். ஆகவேதான் இன்றைக்கு நம் ராஜ்யத்தை இதர ராஜ்யங்களோடு ஒப்பிடாமல், இதர இந்திய ராஜ்யங்களிலிருந்து, தேசத்தில் இருந்து அவர் சர்வதேச எல்லைக்கே போய்விட்டார்.

இதேபோல் மற்றொன்று கூறப்பட்டது. மின்சார உற்பத்தியில் நம் ராஜ்யம் மூன்றாவதாகத்தானே இருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள். அதுவும் குறிப்பாக மூன்றாவது இடத்திலிருந்து ஐந்தாவது இடத்திற்கு தள்ளப்பட்டுவிட்டதே என்று கனம் சின்னதுரை அவர்கள் சொன்னார்கள். அவருக்கு இந்தப் புள்ளிவிவரம் எங்கே கிடைத்ததோ தெரியாது. இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில் மின்சாரம் நமக்கு மிக அதிகமாகத் தேவைப்படுகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அதுவும் குறிப்பாக நமது என்ஜினீயர்களை இன்றைய தினம் எல்லோரும் பாராட்டுகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் இங்கு இருக்கக்கூடிய சிறு சிறு ஓடைகளைக்கூட ஒன்றாகத் தொகுத்து, டன்னல் அமைத்து செயற்கையில் பெரிய நீர்த்தேக்கமாக்கி, வீணாக ஓடிக்

16th August 1960] [Sri V. Ramaiah]

கொண்டிருந்த தண்ணீரை எல்லாம் மின்சார உற்பத்திக்குப் பயன் படுத்த வகை செய்திருக்கிறார்கள். குந்தாத் திட்டத்தை மட்டும் பார்க்கலாம். நம்முடைய முதல் இரண்டு திட்டங்களில் 4,11,700 கிலோவாட்ஸ் அளவுக்கு நம்முடைய உற்பத்தியின் திறன் பெருகியிருக்கிறது என்று சொன்னால் இதைப் பார்த்து மற்றவர்கள் பாராட்டுகிறார்கள். நமக்கு இன்னும் அதிகமாக திட்டங்களை அமைக்க வசதி இருக்கிறதா என்றால் பெரும் அளவுக்கு, பெரும் திட்டங்களை எல்லாம் பூர்த்தி செய்கின்ற வசதி இனி நமக்குக் கிடையாது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் எதையெல்லாம் பூர்த்தி செய்யவேண்டுமோ அதையெல்லாம் பூர்த்தி செய்துவிட்டோம். இப்போது நமக்கு இருக்கிற திட்டங்களை இனி விஸ்தரிக்க முடியாது என்பது பிரச்னை. இன்றைக்கு பைகாராவில் இன்னும் அதிகமாக உற்பத்தி செய்வதற்கு சாந்திநல்லா திட்டத்தை உருவாக்கியிருக்கிறார்கள். மேட்டூரில் இருந்தும்—தண்ணீர் அதிகமாக இருக்கக்கூடிய காலத்தில்—நிரந்தர சாகுபடி பாதிக்கப்படாத வகையில், அதிக மின்சாரம் உற்பத்தி செய்யவும் ஒரு திட்டத்தை உருவாக்கியிருக்கிறோம். ஒரு லட்சம் கிலோவாட்ஸ் கிடைக்கும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பூர்த்தியாகக் கூடிய காலத்தில் இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் கிலோ வாட்ஸ் கிடைக்கும். நமக்கு இன்னும் மிக அதிகமாக மின்சாரம் தேவைப்படுகிறது என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம். வடாற்காடு ஜில்லா, இன்னும் பாசன வசதி இல்லாத ஜில்லாக்கள் எல்லாவற்றிலும் இன்றைக்கு விவசாயத்திற்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை வளர்ந்து கொண்டே போகிறது. ஆகவே இன்னும் துரிதமாக மின்சாரத்தை கிராமங்களுக்கு விஸ்தரிக்க வேண்டிய நிலைமையில் நாம் இருக்கிறோம். கிராமங்களுக்கு விஸ்தரிப்பு செய்துவிட்டால் மட்டும் போதும் என்ற நினைப்பு எனக்குக் கிடையாது. விவசாயத்திற்கும் வினியோகிக்க வழி செய்ய வேண்டும். ஆகவே நான் இதில் அதிக அக்கறை காட்டவில்லை என்று கனம் அங்கத்தினர் அண்ணாமலையைப் போன்றவர்கள் நினைத்துவிடக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு நமக்குக் கிடைக்கக்கூடிய மின்சாரத்திலே பெரும் பகுதியை தொழில் துறைக்குக் கொடுத்துக்கொண்டிருக்கிறோம். இன்னும் அதிகமாகத் தொழில் துறை வளர்ச்சி அடையவேண்டு மென்றால் இன்றைக்கு நாம் உற்பத்தி செய்கிற மின்சார சக்தி போதாது. இதற்கு ஏதேனும் வழிவகை கண்டுபிடித்தாக வேண்டும். அரசாங்கம் எதையெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்துகொண்டுதான் வருகிறது. இயற்கை வசதிகளையெல்லாம் பெரும் அளவுக்கு நாம் பயன்படுத்திக் கொண்டுவிட்ட காரணத்தினாலே நாம் இன்னும் வேறு ஏதாவது வழிவகைகளைத்தான் கண்டுபிடித்தாக வேண்டும். நெய்வேலியில் உற்பத்தி செய்யக்கூடிய மின்சார சக்தியை—இன்று ஏற்பட்டு வருகிற தொழில் வளர்ச்சியை மனதில் கொண்டு பார்த்தால் அதுகூடப் போதாது என்பது என்னுடைய நினைப்பு.

[Sri V. Ramaiah] [16th August 1960

அது போலத்தான் இன்றைக்கு எல்லா நாடுகளுமே அடைந்து வருகிற தொழில் வளர்ச்சியை மனதில் கொண்டு வேறு ஏதாவது வகையில் மின்சாரத்தை அதிக அளவில் உற்பத்தி செய்ய வேண்டும் என்கிற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். நமது இந்திய அரசாங்கமும் "அட்டாமிக் பவர் கமிஷன்" மூலம் அம்முயற்சியில் இறங்கியிருக்கிறார்கள். "அடாமிக் பவர்" உற்பத்தி செய்வது எனறால் அதற்கு வேண்டிய வசதிகள் ஒரு நாட்டில் இருக்கின்றனவா, அதனால் லாபம் உண்டா, நஷ்டம்தானா என்பதையெல்லாம் ஆராய்ச்சி செய்யாமல் ஒரு காரியத்தில் இறங்க முடியாது. உடனே "அட்டாமிக் பவர்" வந்துவிட வேண்டும் என்று சொல்லுவதும் சரியாகாது. காரணம் அது இன்றைய தினம் ஆரம்ப கட்டத்தில்தான் இருக்கிறது. இன்னும் சரியான முடிவு தெரியவில்லை. ஆனாலும் நமது பிரதம மந்திரி அவர்கள் இதில் மிகுந்த அக்கறை காட்டி பம்பாய்க்குப் பக்கத்தில் ஒரு ஆராய்ச்சிக் கூடத்தை நிறுவினார்கள். அதன் பலன் மிகவும் அனுகூலமாக இருக்கும் என்ற முறையில்தான் நம்பிக்கை ஏற்பட்டு வருகிறது. அதன் காரணமாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் "அட்டாமிக் பவர் ஸ்டேஷன்" அமைக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைப் பற்றி நமது அரசாங்கமும் ஆராய்ந்து கொண்டிருக்கிறது. இன்றைக்கு "அட்டாமிக் பவர் ஸ்டேஷன்" என்று பேசுகின்ற நேரத்தில், ஒரு ஸ்டேட்டின் அளவுக்கு அது எப்படி இருக்க வேண்டும், இரண்டு லட்சம் பவர் யூனிட் என்று வைத்தால் லாபமா, ஐந்து லட்சம் பவர் யூனிட் என்று வைத்தால் லாபமா, இன்னும் அதிகமாக வைக்கவேண்டுமா, என்பது நமது பிரச்னை. அதைப்பற்றியெல்லாம் நிபுணர்கள் ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள்.

(Mr. Speaker in the Chair.)

நீர் விசையைக் கொண்டு இனிமேல் செய்ய முடியாது. ஆனால் நிலக்கரியைக் கொண்டு அதிகமாக தெர்மெல் ஸ்டேஷன் ஏற்படுத்த முடியுமா என்று பார்க்கிறோம். அதுவும்கூட ஒரு வகையில் கஷ்டமாகத்தான் இருக்கும். நமக்குத் தேவை அதிகமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. இன்றைக்கு நமது மாகாணத்தைப் பொறுத்தவரை, நம்மைச் சுற்றியிருக்கும் மாகாணங்களைக் காட்டிலும் இந்த மாகாணத்தில் அட்டாமிக் பவர் ஸ்டேஷன் வந்துதான் ஆகவேண்டுமென்ற நிலை தொழில் துறையில் இருக்கும் வளர்ச்சியின் காரணமாக, ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் நமக்குப் பக்கத்தில் இருக்கும் ஆந்திர ராஜ்யத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, மைசூர் ராஜ்யத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, கேரள ராஜ்யத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, அவர்களுடைய எல்லையில் ஓடக்கூடிய பெரிய நதிகள், நீர்வீழ்ச்சிகள் இவைகளைக் கொண்டு இன்னும் கணிசமான அளவு நீர்மின்சாரத்தை உற்பத்தி செய்யமுடியும். பத்து லட்சம் கிலோவாட்ஸ் மின் சக்தியை உற்பத்தி செய்யமுடியும்.

16th August 1960] [Sri V. Ramaiah]

நம்முடைய குந்தாத் திட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஷெராவதித் திட்டம் ரொம்ப சாதாரணத் திட்டம். இரண்டு அணைக்கட்டுகளைக் கட்டிவிட்டால் போதும், 10 அல்லது 15 லட்சம் கிலோவாட்ஸ் மின்சக்தி கிடைக்கக்கூடும். எனக்குப் புள்ளிவிவரம் சரியாக ஞாபகம் இல்லை. ஆனால் குறைந்த பட்சம் 10 லட்சம் கிலோ வாட்ஸ் சக்தி கிடைக்கக்கூடும். இதுபோன்று ஆந்திரப் பிரதேசத்தில் ஓடும் பெரும் நதிகளைக் கொண்டு அவர்கள் அதிகமாக நீர்மின்சக்தியை உற்பத்தி செய்ய முடியும். நமக்குப் பக்கத்தில் இருக்கும் கேரள ராஜ்யத்தை எடுத்துக் கொண்டால், அங்கு இருக்கக் கூடிய அதிகத் தண்ணீர் வசதியைக் கொண்டு அவர்களும் நீர்மின்சாரத்தை அதிகமாக உற்பத்தி செய்ய முடியும். ஆனால் இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில் நமக்கு இது போன்ற வசதிகள் அதிகமாக இல்லாததன் காரணமாக நமது மாகாணத்தில் ஏற்படக்கூடிய தொழில் வளர்ச்சிக்கேற்ப மின்சாரத்தை உற்பத்தி செய்ய வேண்டுமென்ற காரணத்தால், நமக்குப் புதுவழி கண்டுபிடித்து ஆகவேண்டுமென்ற முறையில் "அட்டாமிக் பவர் ஸ்டேஷன்" இந்த மாகாணத்தில் அமைக்கப் படவேண்டுமென்று வலியுறுத்திச் சொல்லுகிறோம். இதை அமைக்க பல சூழ்நிலை இருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். அதற்குத் தேவையான "டிமான்ட்" இருக்க வேண்டும். அட்டாமிக் பவர் ஸ்டேஷனுக்கும் மற்ற நிலையங்களுக்கும் இருக்கும் வித்தியாசம் என்னவென்றால் அட்டாமிக் பவர் ஸ்டேஷன் எந்த நிமிஷத்தில் வேலை செய்ய ஆரம்பிக்கிறதோ அந்த நிமிஷத்திலிருந்து இதில் இருக்கும் கபாசிடி பூராவும் மின்சார உற்பத்தி ஆகிறது. இரண்டு லட்சத்து ஐம்பது ஆயிரம் கிலோ வாட்ஸ் மின்சாரம் ஜெனரேட் செய்கிறதென்றால் அடுத்த நிமிஷத்திலிருந்தே அதை உபயோகப்படுத்த வேண்டும். ஆனால் தெர்மல் நிலையங்களையோ அல்லது நீர் மின்சார நிலையங்களையோ எடுத்துக் கொண்டால் அவைகளில் நமக்கு எவ்வளவு தேவையோ அதற்குத் தகுந்த அளவு உற்பத்தி செய்துகொள்ள முடியும். ஆனால் அட்டாமிக் பவர் ஸ்டேஷனில் இரண்டு லட்சத்து ஐம்பது ஆயிரம் கிலோ வாட்ஸ் மின்சக்தி 24 மணி நேரமும் ஜனரேட்டாகிக் கொண்டிருக்கும். ஆகையால் திட்டக் கமிஷனைச் சேர்ந்தவர்களும், அட்டாமிக் பவர் ஸ்டேஷனைச் சேர்ந்தவர்களும், "இரண்டு லட்சத்து ஐம்பது ஆயிரம் கிலோ வாட்ஸ் மின்சாரம் கொடுத்தால், அதை உங்களால் எடுத்துக் கொள்ள முடியுமா" என்று கேட்கும் நேரத்தில் இந்த மாகாணத்தில் இருக்கும் தேவை அந்த அளவுக்கு வளர்ந்திருக்கும் காரணத்தால், பூராவையும் எடுத்துக் கொள்ள முடியும் என்று உறுதியாகச் சொல்லுகிறோம். மற்றொரு தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டியது, இந்த மாகாணத்தில் இருக்கும் "கிரிட்" அதை எடுத்துக்கொள்ள முடியுமா என்பது. இந்த கிரிட் அமைப்பைப் பொறுத்தவரை அதை எடுத்துக் கொள்ள முடியும் என்று சொல்லலாம். இது போன்ற அடிப்படையான கோரிக்கைகளை நாம் பூர்த்தி செய்ய முடியும். மாகாணத்தில் மினரல் கிடைக்கும் காரணத்தால்

அதை நாம் பயன்படுத்த முடியும். ஆகையால் இந்த மாகாணத்தில் அணு மின்சார சக்தி நிலையம் அமைக்க நல்ல சூழ் நிலை இருக்கும் காரணத்தால் அதைத் தொடர்ந்து வலியுறுத்து கிறேம். நாம் வலியுறுத்துவதைக் காட்டிலும், இந்திய அரசாங்கமே அதை நேரே பார்த்துக்கொண்டிருக்கும் காரணத்தால், சென்னையிலிருந்து வரும் கோரிக்கையை முறை யாகப் பரிசீலனை செய்வார்கள் என்று என்னல் சொல்ல முடியும்.

கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார், ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி போன்றவர்கள் அணு மின்சார நிலையம் வந்துதான் ஆகவேண்டுமென்று கூறினர்கள். அது எப்படியிருக்கும், அதன் உருவம் என்ன, அது எங்கே கிடைக்கும் என்று தெரியாது என்று நினைக்கிறேன். இது பெரிய ஆராய்ச்சிக் கட்டத்தில் இருக்கிறது. ஆராய்ச்சி வெற்றி யாக முடியும், அதன் பலன் நமக்கு கிடைக்கும், என்ற முறையில் தான் இது கிடைக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். கோரிக்கை போட்டுவிடுவதால் மட்டும் வந்துவிடாது. இதற்குத் தகுந்த நல்ல அறிகுறி இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு இந்த அணுமின்சார நிலையத்தைப் பொறுத்தவரையில் இதில் கோஷங்கள் போட்டு "நாங்கள் சொன்னேம் அதனல் வந்தது" என்ற நிலை இருக்கவேண்டிய அவசியம் இல்லை. இதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலை இங்கேயே இருக்கிற தென்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்ல விரும்புகிறேன்.

மற்றெரு முக்கியமான பிரச்னை கனம் ஸ்ரீ வி. கே. ராம சாமி முதலியார் குறிப்பிட்டார்கள், மற்றவர்களும் சொன்னர் கள். "இண்டர் ஸ்டேட் கிரிட்"-ஐ நீங்கள் ஒப்புக்கொள்ளும் நேரத்தில் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கவேண்டும், திரும்பப் பரிசீலனை செய்யவேண்டும் என்று சொன்னர்கள். அவர்கள் மனதில் ஓடிக்கொண்டிருக்கும் பயம் ஏதோ நமது மாகாணத்தில் நாம் மின்சாரத்தை அதிகமாக உற்பத்தி செய்வது போலவும், ஏதோ அண்டை மாகாணங்களில் அதிகமான உற்பத்தி செய் யாதது போலவும், நம் மாகாணத்தில் உள்ள மின்சார சக்தி அவர்களுக்குப் போய்விடுமோ என்ற முறையில் பயம் ஏற்படு கிறது. நான் என்னுடைய ஆரம்ப உரையில் சொன்னதை இங்கே திரும்பவும் குறிப்பிட விரும்புகிறேன். இப்பொழுது நமது ராஜ்யம் பூராவும் ஒரே கிரிட்டாக ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முன் மின்சாரம் 4, 5, சிஸ்டங்கள் வைத்திருந்தார்கள். இதன் காரணமாக எங்கு எங்கு உடனடி தேவை பீக் லோட் ஏற்படுகிறதோ அப்போது மற்றெரு நிலையத்தில் உபரியாக இருந்தாலும், அதைப் பயன்படுத்த முடியாத கட்டம் இருந்தது. இன்றைக்கு நம் மாகாணத்திலுள்ள பவர் ஸ்டேஷன்கள் எல்லாம் ஒன்ருக இணைக்கப்பட்டிருப்பதால் எங்கெங்கே பீக் லோட் இருக்கிறதோ, அதற்கு உதவி செய்யும் முறையில் மற்றெரு பவர் ஸ்டேஷனில் ஜெனரேட் பண்ணமுடியும். இன்னும் இன்டர் ஸ்டேட் கிரேட் வேண்டுமென்று சொல்லுகிறேம். பீக் லோட் பிரச்சினையை நீக்க எல்லா நிலையங் களும் முறையாக அழைத்துவிட்டால் ஒரு ராஜ்யத்தில் உபரியாக

16th August 1960] [Sri V. Ramaiah]

இருக்கும் மின்சாரத்தை இன்னொரு ராஜ்யம் பகிர்ந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. "இன்டர் ஸ்டேட் கிரிட்"-ஐப் பொறுத்தவரையில் இதைப் பரிசீலனை செய்ய "ஸோனல் கவுன்சில்" ஒரு சப் கமிட்டியை ஏற்பாடு செய்திருக்கிறது. அதன் முடிவை இன்றைக்குப் பரிசீலனை செய்திருக்கும் காரணத் தால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதை ஆரம்பிக்க முடியும் என்று நினைக்கிறேன். சட்டசபை அங்கத்தினர்களுக்கு ஏதோ பயம் இருக்கிறது. ஏதோ நமது மாகாணத்தில் உபரியாக இருக்கும், மின்சாரத்தை மற்ற மாகாணத் திற்குக் கொடுத்துவிட்டு நம் மாகாணம் பாதிக்கப்பட்டுவிடுமோ என்ற பயம் இருக்கிறது. இது போன்ற பயம் மற்ற மாகாணங் களுக்கும் இருக்கிறது. குறிப்பாக, மைசூர் மாகாணத்திற்கு இத்தகைய பயம் இருக்கிறது. ஷராவதித் திட்டம் வந்த பிறகு அவர்களுடைய உபரி மின்சாரத்தை நாம் கேட்டு விடுவோமோ என்று அவர்கள் பயப்படுகிறார்கள். இது போன்று ஆந்திரப் பிரதேசமும் நினைக்கிறது. ஆகையால், நம் மாகாணத்தில் மட்டும்தான் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது, மற்ற மாகாணங்களில் இல்லை என்று நினைக்கக்கூடாது. மூன்று வது ஐந்தாண்டுத் திட்டம் முடியும் நேரத்தில் நமது மாகாணத் தில் இருக்கும் மின்சாரத்தைக் காட்டிலும் மற்ற ராஜ்யங்களில் அதிகமாக இருக்குமென்று நினைக்கிறேன். ஏனென்றால் அவர் களுக்கு இயற்கை வசதிகள் அதிகமாக இருக்கின்றன. ஆகை யால் உபரி மின்சாரத்தைப் பகிர்ந்துக்கொள்வதுதான் இன்டர் ஸ்டேட் கிரிட் அமைப்பதன் நோக்கம் ஆகும். இங்கு இருக்கும் பீக் லோட் டிமாண்டை எவ்வளவு சாதாரணமாக கஷ்டமில்லாமல் ஒருவருக்கொருவர் உதவிக்கொண்டு அதனால் அதிகமாக லாபம் பெற முடியுமோ அந்த "எகானமி" தான் இதில் முக்கியமான அம்சம். அது இன்னும் தொடர்ந்து வளர்ந்து 4-வது ஐந்தாண்டுத் திட்டத்திலோ, 5-வது ஐந்தாண்டுத் திட்டத்திலோ தேசிய கிரிட் ஏற்படவேண்டு மென்று சொல்லுகிறோம். அந்த நிலை ஏற்பட்டால் மின்சார உற்பத்தி எங்கு பார்த்தாலும் ஏற்பட்டு எல்லோருமே அதனுடைய முழுப் பலனைப் பெற உதவும். "இன்டர் ஸ்டேட் கிரிட்" இப்பொழுது தான் ஆரம்பமாகிறது. இது தொடர்ந்து வளர்ந்து நான் குறிப்பிட்டிருக்கும் "தேசிய கிரிட்" ஏற்பட்டாகவேண்டும். இதற்கு வேண்டிய முயற்சி யும் எடுக்கவேண்டுமென்ற முறையில்தான் இந்தத் திட்டம் அமைந்திருக்கிறது.

இன்னும் மற்றொரு முக்கியமான பிரச்னை—பலரால் பேசப் பட்ட பிரச்னை—என்னவென்றால் இன்னும் ஏன் லைசெனஸ் தாரர்களை விட்டு வைக்க வேண்டும் என்று எதிர்கட்சியைச் சேர்ந்தவர்களும் கேட்டார்கள். லைசென்ஸ்தாரர்களை எடுத்து விடாமல் இருப்பதனால் ஏதோ லாபம் இருக்கக்கூடும் என்று நினைத்தார்கள். இந்த லைசென்ஸ்தாரர்கள் செய்யக்கூடியதைப் பார்த்தால் எங்களுக்கு எந்தவிதமான லாபமும் இருப்பதற்கு காரணமே இருக்க முடியாது. லைசென்ஸ்தாரர்கள் எல்லையில் அதிகமாக விஸ்தரிப்பு நடக்கவில்லை என்பதுதான்

1-00 a.m. இப்பொழுதுள்ள பிரச்ண. ஆகவே, லைசென்ஸ்தாரர்கள் செய்தாலும் சரி, அல்லது அரசாங்கமே செய்தாலும் சரி, கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்தாக வேண்டும். அதற்குள்ள நிலையைக் கண்டுபிடிக்க வேண்டும். இங்குள்ள சட்டமன்ற அங்கத்தினர்கள் லைசென்ஸ்தாரர்கள் மீது அதற்காக கோபம் கொள்வதில் நியாயமில்லை, பொறுத்தமில்லை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஏனெனில், மின்சார வளர்ச்சித் சரித்திரத்தைப் பார்த்தால் ஒரு காலத்தில் லைசென்ஸ்தாரர்கள் அரசாங்கத்திற்குப் பெரும் உதவி செய்திருக்கிறார்கள். 10, 12 ஆண்டுகளுக்கு முன்பு உற்பத்தியான மின்சாரத்தை என்ன செய்வது, அதை எப்படி விநியோகம் செய்வது என்று கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் வட ஆற்காடு ஜில்லா, அல்லது தென் ஆற்காடு ஜில்லா போன்றவை மின்சாரத்தை எடுத்துக் கொள்ள முன்வராத காலத்தில் தஞ்சை, திருச்சி போன்றயிடங்களிலுள்ள விநியோகஸ்தர்கள் பெரிய உதவி செய்தார்கள். தஞ்சை ஜில்லாவிலுள்ள கிராமங்களில் மின்சார விஸ்தரிப்பை லைசென்ஸ்தாரர்கள் தான் எடுத்துச் செய்திருக்கிறார்கள். ஆனால் இப்பொழுதுள்ள நிலையில் பின்தங்கிய இடங்களுக்கு எல்லாம் மின்சாரம் கிடைக்க வேண்டும். தஞ்சை ஜில்லாவைப் பொறுத்தமட்டில் அரந்தாங்கி தாலுகாவுக்கு மின்சாரம் வேண்டும். அப்பொழுதுதான் அங்குள்ள விவசாயிகளுக்குச் சௌகரியமாயிருக்கும். அதேபோல் பட்டுக்கோட்டை தாலுகா முழுமைக்கும் மின்சாரம் வந்தால்தான் அங்குள்ள விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முடியும். தஞ்சை ஜில்லாவிலும் எவ்வளவோ பிற்போக்கான பகுதிகள் இருக்கின்றன. அங்கெல்லாம் மின்சார விஸ்தரிப்பு செய்ய வேண்டுமென்ற கோரிக்கையிருக்கிறது. அதேபோல்தான் திருநெல்வேலி ஜில்லா, சேலம் ஜில்லா ; அதேபோல் வட ஆற்காடு ஜில்லா. இப்படி பல பகுதிகளில் மின்சார விஸ்தரிப்பு நடக்காமல் இருப்பதால் பலருக்கு கோபம் ஏற்படுகிறது. அப்படிக் கோபிப்பதற்குப் பதிலாக, இந்தப் பிரச்னையைத் தீர்க்க வேண்டுமென்று அவர்களுக்குக் கொஞ்சம் உதவி செய்வதற்காக 25 லட்சம் ரூபாய் இந்த ஆண்டு கொடுக்க முடிவு செய்திருக்கிறோம். ஆனால் சட்டசபை அங்கத்தினர்கள் சொல்லக் கூடிய கோரிக்கைகளை யெல்லாம் பரிசீலனை செய்து, அவைகளை யெல்லாம் செய்து முடிக்க வேண்டுமென்றால் இந்த 5 லட்சம் போதாது. சட்டசபை அங்கத்தினர்கள் சொல்லியிருக்கும் திட்டங்களில் ஒவ்வொரு திட்டத்தை ஒவ்வொருவருக்கும் செய்து கொடுக்க வேண்டுமென்றால் ஒரு கோடி ரூபாய கூட வேண்டுமோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. 25 லட்சம் ரூபாயில் எல்லா அங்கத்தினர்களையும் திருப்திப்படுத்தக் கூடிய முறையில் ஏதாவது செய்ய முடியுமா என்பதை நான் பரிசீலனை செய்து பார்க்க வேண்டுமென்று, மின்சார போர்ட் முடிவிற்கு வருமுன் இதை நேரிடையாகப் பார்க்க வேண்டுமென்ற என் நிலையைச் சொல்லியிருக்கிறேன். அதைப் பரிசீலனை செய்து பார்த்து

16th August 1960] [Sri V. Ramaiah]

காலாகாலத்தில் செய்து கொடுக்க முன்வருகிறேன். அதனால் மட்டும் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. லைசென்ஸ் தாரர்கள் பகுதிகள் பூராவையும் எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் லைசென்ஸ்தாரர் பகுதிகளில் கணிசமான மின்சார விஸ்தரிப்பு நடக்காமலிருந்தால் அரசாங்கமே விஸ் தரிப்பு செய்ய அதிலுள்ள கஷ்டங்கள் என்ன என்று ஆராய்ந்து பார்த்து எந்த லைசென்ஸ்தாரர் பகுதியில் அதிக துரிதமாக மின்சார விஸ்தரிப்பு நடைபெறாமல் இருந்ததோ, எங்கிருந்து அதிகமாக புகார் வருகிறதோ அங்கு அரசாங்கம் அல்லது மின்சார போர்டே விஸ்தரிப்பு செய்யலாம் என்ற முடிவிற்கு வந்திருக்கிறோம். ஆகவே வருகிற ஆண்டில் இந்தக் கஷ்டம் லைசென்ஸ்தாரர்கள் பகுதிகளிலிருந்து வரக்கூடிய அங்கத்தினர் களுக்கு அதிகமாக இருக்காது. அதைத் துரிதப்படுத்த என் னென்ன முயற்சிகள் எடுக்க வேண்டுமோ அவைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்று சொல்லிக்கொண்டு பொதுவாக மற்ற கோரிக்கைகளைப் பொறுத்த மட்டில் இங்கு பேசிய அங்கத் தினர்கள் குறைவாக இருந்தாலும் கோரிக்கைகளைப் பொறுத்த வரையில் நூற்றுக்கணக்கான கோரிக்கைகள் வந்திருக்கின்றன. இவைகளையெல்லாம் பரிசீலனை செய்து தீர்த்துக் கொடுக்க எல்லாவித முயற்சிகளையும் மின்சார போர்ட் எடுக்குமென்று சொல்லிக்கொண்டு அங்கத்தினர்கள் அதிக நேரம் எடுக்காத காரணத்தினால் நானும் அதிக நேரம் எடுத்துக்கொள்ள வேண்டாம், எடுக்கவில்லையென்று என் நிலையைத் தெரிவித்துக் கொண்டு, இந்த ஆண்டும் பொதுவாக மின்சார போர்ட் நல்ல படியாக வேலைகள் கவனித்து செய்து வந்திருக்கிறது என்று சொல்லிக்கொண்டு, அதிலுள்ள சிறு குறைகளை நீக்குவதற்கும், இன்னும் விவசாயிகள், சிறு தொழில் செய்யக்கூடியவர்கள், கிராம வாசிகள் இவர்களுக்கு அதிக நன்மை ஏற்பட, அங்கத்தினர்கள் சொன்ன கருத்துக்களை அரசாங்கம் பரிசீலனை செய்யும் என்று சொல்லிக் கொண்டு என் நன்றியையும் தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

## VII.—ANNOUNCEMENT *re* BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER: "பிஸினஸ் அட்வைஸரி கமிட்டி" இன்று காலை 9½ மணிக்குக் கூடி தீர்மானித்ததைப்பற்றி இப்போது இந்தச் சபைக்கு சொல்ல விரும்புகிறேன்.

சபை ஆகஸ்டு 23-ம் தேதி கலைந்து மீண்டும் செப்டம்பர் மாதம் 5-ம் தேதி கூடி 15-ந் தேதி வரை நீடித்து நடைபெறும்.

செப்டம்பர் 5ந் தேதி 1960.—"அப்ரோப்பிரியேஷன் பில் 1960 't' லாங்வேஜ் பாலிஸீ "யைப்பற்றி விவாதம் (ஆகஸ்டு 24, 25-ந்தேதிகளில் எடுத்துக் கொள்வதாக இருந்த அலுவல்) அன்றைய தினம் காலை 9-30 மணி முதல் மத்தியானம் 1-30 மணி வரையிலும், மாலை 3 மணி முதல் 6 மணி வரையிலும், ஆக 8 மணி நேரம் விவாதம் நடைபெறும். அன்றையதினம்கனம் அமைச்சர் அவர்களுக்கு 1½ மணி நேரம் ஒதுக்கிவைத்து பாக்கி 6½ மணி நேரம் அங்கத்தினர்கள் பேசலாம்.

| | |
|---|---|
| செபடம்பர் 6ம் தேதி 1960.<br>செப்டம்பர் 7ம்தேதி, 1960.<br>செப்டம்பர் 8ம் தேதி 1960. | மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட வரைவின் மீது விவாதம். |